

# திருக்குறள்

**எனைத்தானும் எஞ்ஞான்றும் யார்க்கும் மனத்தானாம்**
**மாணாசெய் யாமை தலை . (இன்னாசெய்யாமை 317)**

எவ்வகையாலும், என்றும், எவருக்கும் மனதுக்கு இசையாத கொடுஞ்செயல்களைச் செய்யாதிருத்தலே மாண்பு.

உரை: **கவிஞர் சிற்பி**



# அன்னையின் அருள்மொழி

**சிலர் தங்கள் ஆன்மாவை இறைவனுக்குத் தருகிறார்கள். சிலர் தங்கள் வாழ்க்கையை, சிலர் தங்கள் வேலையை, சிலர் தங்கள் செல்வத்தைத் தருகிறார்கள். ஒரு சிலரே தங்கள் உடைமைகளையெல்லாம் – ஆன்மா, வாழ்க்கை, வேலை, செல்வம் எல்லாவற்றையும் அளித்து,மேலும் தங்களையே முற்றிலுமாக இறைவனுக்கு அர்ப்பணிக்கிறார்கள். இவர்களே இறைவனின் உண்மையான குழந்தைகள், மற்றவர்கள் ஒன்றும் கொடுப்பதில்லை. இவர்களுடைய பதவி, ஆதிக்கம், செல்வம் எல்லாம் எவ்வளவாக இருந்த போதிலும், இறைவனுடைய நோக்கத்திற்கு இவர்கள் வெறும் பூஜ்ஜியங்களே..**

**அன்னை**

# ஆசிரியர் பக்கம்

## முள்ளிலும் மலர்ந்த செம்மலர்கள்’

தோட்டம் முழுதும் பூக்கள் தரைப்பூ, கொடிப்பூ, மரத்துப் பூ, நீர்ப்பூ, வண்ணங்கள் வடிவங்கள். இவற்றைப் பார்த்து அழகியலில் மூழ்கியோ, அறிவியலில் ஆய்வுசெய்தோ ஒவ்வொருவரும் அவரவர் வழியில் பூக்களை ஆராதிப்பார்கள். இம்மலர்களை ஏந்திவளர்ப்பன கிளைகள், காத்துவளர்க்கும் இலைகள். தாங்கியிருக்கும் வலுவான தண்டுகள் மட்டுமா? மண்ணில் ஊன்றி நீர்தேடி ஜீவாதாரத்தைக் குவித்துப் பகிர்ந்து பக்குவமாய் வழங்கிக்கருணையாற்றும் சல்லி வேர்களை யாரேனும் உடனடியாக எண்ணி நன்றிகூறுவது உண்டோ?

ஏறத்தாழ, அதே நிலைதான் பாரத தேசத்தின் அரசியல் பொருளாதார அடித்தளமாக விளங்கிய குலவிளக்குகளாகிய மகளிர்க்கும் காலங்காலமாக நேர்ந்து வந்துள்ளது. “விதைநெல்லையே அவித்துத் தின்று விடுவதும் உண்டு” என்று தீபம் நா பார்த்தசாரதி கூறுவதுபோல நடந்துள்ளது. பெண்களைக் கீழே இட்டு மிதித்து ஆங்கார ஆண்மை மேலே நிமிர்ந்து நிற்க முயற்சி எடுத்த போதெல்லாம் ஆண்கள் தலைகீழாகக் குப்புற விழுந்துகொண்டேயிருந்தார்கள் என்பதும் புதிதல்லவே.

குறிப்பாக, இந்திய விடுதலைப் போராட்டம் ஆண்களால் முன்னெடுக்கப்பட்டக் காலத்தில் மகாத்மா காந்தியடிகள் வகுத்த அகிம்சைப் பாதையிலும், நேதாஜி சுபாஷ்சந்திரபோஸ் எடுத்த வீரிய வழியிலும் ஆயிரக்கணக்கான மகளிர் ஆர்வமுடன் இணைந்து பணிசெய்ய திறந்து வைக்கப்பட்டவையே சமூகப் புரட்சியின் மகாவாசல்கள் என்போம். மகளிரால் கொடிவிளக்குகள் ஏற்றப்பட்டு இருளாசுரன் அழிந்து வீழ்ந்தான். விடுதலை வேண்டியிருந்த நாடுகளுக்கெல்லாம் பாரதமே வழிகாட்டியது என்பதுதானே வரலாறு.

சுதந்திர நாட்டில், மக்கள் ஆட்சியைக் கொண்டாட தேசிய மாளிகைகளில் திருவிளக்குகள் பளிச்சிடும் பொழுதுகளுக்கு முன்னோடிகளாக எங்கெல்லாம் முதல் ஒளித்துளிகள் ஏற்றப்பட்டன என்று தெரிந்து கொள்ள இந்நூல் ‘விடுதலைக் களத்தில் வீர மகளிர்’ தகுந்த வழிகாட்டியாகத் திகழ்கிறது. இந்நூலின் தரவுகளுக்குள் பளீரிடும் உண்மைகளைப் பார்த்தால் தெரியும் தகிப்பு!

ஒடுக்கப்பட்டோரின் மண்குடிசை சுள்ளிக்குச்சிகளின் அடுப்பு எரிப்பின் பசி தீர்க்கும் நெருப்பில் .......

எல்லா மனைகளிலும் மகளிர் இறைமுன் ஏற்றும் எண்ணெய்த்திரி அகல்களின் ஒளிரும் சுடர்களில் - சாதி இனமொழி வேறுபாடு

இல்லாமல் யார் வேண்டுமானாலும் அருட் கோவிலுனுள் சென்று சுத்த சமரசத்தில் நிலைத்து வழிபடும் கருணை ஜோதிகளில்- போர்களற்ற புதியதோர் உலகில் மனிதஉயிர்கள் மட்டுமின்றி அனைத்து உயிரிகளும் இணைந்து அமைதியில் வாழ்வதற்கான வாழ்க்கைத் திருவிளக்குகள் ஏற்றப்படும் கல்விக் கூடங்களில்....

காலக்கதைப்புகளில் இத்தனை உணர்ந்திருந்தும் விடுதலை வேள்வித்தீயில் சமித்துகளான வீர மகளிர் பற்றி மிகமிகக் குறைவான பதிவுகளே நமக்குக் கிடைத்துள்ளன என்பதே சுடும் உண்மை.

அந்தச் சுதர்ம சுதேசியத்தைப் போற்றிடும் எனது இனிய சகோதரி கவிதாயினி திருமதி உமா மோகன், புதுச்சேரி பாரதிசெல்லம்மாள் அரங்கத்தில் என்னிடம் அளித்த நூல் ‘விடுதலைக் களத்தில் வீரமகளிர்’ தொகுப்பு காட்டுவெளியிடை என்னை நலமுடன் அழைத்துச் செல்லும் பெயர் தெரியாத பலநூறு மூலிகை இலை மலர் வேர்களைப்போல வாசனையாய் வந்து ஆரத்தழுவியது.!

அம்மாடி! ஏற்கனவே அச்சில் தோன்றிவிட்ட 250 மங்கயைர் திலகங்கள்போக 251 இந்நூலிலிருந்து அவந்திகாபாய் கோகலே முதல் 300- பர்தோலி விஜயாபென் மனுபாய் பஞ்சோலியுடன் மேலும் ஐம்பது சகோதரிகளைப் பற்றிய வாழ்க்கை வரலாறுகள் படிக்கக் கிடைத்துள்ளன. நமது மாண்புமிகு மகளிரின் மேன்மைகளை எழுதி வைக்க ஏடுகள் போதாது; எழுது கோல்கள் எழுதி எழுதி மாளாது; எனவே கணிப்பொறியில் இட்டுவைக்க மேலும் பல மின்குறும் பலகைகளை தேசம் உற்பத்தி செய்தாக வேண்டும்.!

ஒன்பது வயதிலேயே திருமணம் செய்து வைக்கப்பட்ட சிறுமி அவந்திகா பாய். இரண்டாம் தாரமாக வாழ்க்கைப்பட்டு இல்லறம் நடத்திய அனுசுயாபாய் காலே. தந்தையை இழந்தபின் பொருளாதார நெருக்கடியினூடேயும் கல்வியில் உயர்ந்து மகளிர் சேவா சங்கங்களுடன் இணைந்து காந்தியவழியினை முன்னெடுத்தும், நவகாளி இனக்கலவரத்தால் கொடூரமாகப் பாதிக்கப்பட்ட அபலைப்பெண்களின் மறுவாழ்விற்காக அருந்தொண்டாற்றியும் வாழ்ந்த சேவகர் அசோகா குப்தா. அந்நிய அரசுக்கு எதிராக நாடகங்கள் குழுப்பாடல்கள் மூலமாக தேசபக்தியைப் பாமரரிடமும் கொண்டு சேர்த்த கிரண்பாலா ருத்ரா.மேலும், மாணவர் இயக்கத்தின் மூலமாக இளைஞர் சக்தியினைக் கொண்டு தீரமாக விடுதலைப் போரில் ஈடுபட்டு ஏகாதிபத்தியத்தினரின் சித்திரவதைக்கு ஆளான இலா சென்.

இப்படி, இப்படி இந்தியாவின் ஒவ்வொரு சிற்றூர்களிலிருந்தும் நகரங்களிலிருந்தும் அகல்யாக்கள், சாவித்ரிகள், ருத்ரமாக்கள், வேதகுமாரிகள், சரளாபென்கள், சுசீலாக்கள், அன்னபூரணிகள் என ஆயிரம் ஆயிரம் பெண்மணிகள் தங்களை மூடியிருந்த திரைகளைக் கிழித்தெறிந்து சூரியதிசைக்கதிர் நோக்கி விடுதலைப் பதாகைகள் ஏந்திப் புறப்பட்டதுதான் பாரத தேசத்தின் பூரண விடுதலைக்குப் பெரும் உத்வேகம் கொடுத்தது என இந்நூல் நமக்கு மிகத்தெளிவாக எடுத்துரைக்கிறது. மெய்ம்மை ஒவ்வொரு பக்கத்தினுள்ளும் அடிநாதமாக ஒலிக்கிறது.

காட்டுமலர்களை அவற்றின் உள்வீரியம் குறையாமல் பூர்விக வாசனையுடன் தமிழில் தொகுத்தளித்துள்ள தோழியர் உமாமோகன் நமது பாராட்டிற்குரியவர். இத்தொகுப்பில் இடம்பெற்றுள்ள ஒவ்வொரு அன்னையருமே தேச விடுதலை வேண்டிநின்ற நம் பாரததேவியாகவே காட்சிதருகின்றனர்.

அவ்வீரமகளிர் ஏற்றிவைத்த நந்தாவிளக்கின் முன் நாம் இன்று இசைக்கிறோம். அம்மக்களின் ஆன்மா பாரத ஆன்மாவாக ஒளிர்கிறது. பாரதியார் நடத்திய சக்கரவர்த்தினி இதழின் இலட்சிய முழக்கம். குறள்பாவாக ஒலிக்கிறது.

பெண்மை அறிவுயரப் பீடோங்கும் பெண்மைதான்.
ஒண்மையுற ஓங்கும் உலகு.



**நூல்நயம் போற்றிடும்**
**இரா.மீனாட்சி**



## அகல்விளக்கு இருளைக்கண்டு அஞ்சுவதில்லை!

**கருநாகம் படர்ந்தாலும் சந்தனம் மணப்பதுண்டு. விஷக்கொடிகள் இருந்தாலும் கனிமரங்கள் பழுப்பதுண்டு. பெரும்பாலை வெயிலிலே குளிர் தருக்கள் வளர்வதுண்டு. கற்பாறை நடுவினிலே கனைநீர் இனிப்பதுண்டு முட்புதர்கள் இடையினிலே நறுமலர்கள் மலர்வதுண்டு உப்புக்கடலடியில் வெண்முத்துப் பூப்பதுண்டு இருள் சூழ்ந்த பொழுதினிலே அகல் விளக்கு ஒளிர்வதுண்டு. பகைநிறைந்த வேளையிலே கருணை மழை பொழிவதுண்டு.**

## கபீர்தாசர்

படித்ததில் பிடித்தது

கபீர்தாசர் பகையும், வெறுப்பும் வன்முறையும் சூழ்ந்திருந்த காலத்தில் வாழ்ந்தார். மதப்பிளவுகளும், சாதிக்கொடுமைகளும் இந்தியச் சமூகத்தைச் சிதைத்துக் கொண்டிருந்த காலம் அது. பொய் உண்மை போலும், உண்மை பொய் பொலும் தோற்றமளித்த காலம். கபீர்தாசரின் இல்லத்திற்கு பண்டிதர் ஒருவர் வந்தார். நாள்முழுவதும் சமூகத்தின் அவலநிலை குறித்து மனம் வெதும்பிப் பேசினார். கபீர்தாசரின் போதனைகளால் சமூகத்தில் எந்த மாற்றமும் ஏற்படாது என வெதும்பினார். உப்புக்கடலில் சர்க்கரையைக் கரைப்பது போல், கபீர்தாசரின் போதனை முயற்சிகள் பயனற்றவை என்றார். ஞானிகள் எத்தனைபேர் வந்தாலும் உலகம் திருந்தாது எனப் புலம்பினார். சூழ்ந்து இருந்தவர்களில் பலரும் அவர் கருத்தை ஏற்றனர். கொடுங்கோலர்களின் ஆட்சியில் எளியவர்கள் படும் அல்லல்களைச் சொல்லி வருந்தினர். அங்கிருந்தவர்களின் மனங்களில் இருளும் துயரமும் நிறைந்திருந்ததை கபீர்தாசரால் உணர முடிந்தது.

மாலை முடிந்து இரவு வந்தது. இருள் சூழ்ந்தது. கபீர்தாசர் அகல் விளக்கு ஒன்றைத் திண்ணை மாடத்தில் ஏற்றினார். கபீர்தாசரின் மனைவி வீட்டிற்குள் குத்துவிளக்கு ஒன்றை ஏற்றினார். கபீர்தாசரின் மகன் விளக்கு ஒன்றைக் கையில் ஏந்தியவாறு மாட்டுக் கொட்டடிக்குச் சென்று பசுக்களுக்குத் தீவனம் போட்டான். இருள் சூழ்ந்திருந்த இந்த வேளையில் கபீர்தாசரின் முகத்தில் அகல்விளக்கின் வெளிச்சம் படர்ந்தது. இருளில் கபீர்தாசரின் முகம் தனியாக ஒளிர்ந்தது. கபீர்தாசரின் முகம் தவிர வேறு ஏதும் தென்படவில்லை. மற்றவை எல்லாம் இருளில் மறைந்தன. கபீர்தாசரை இரவு வேளைகளில் கண்டால் வரும் பரவசம் பகல் வேளைகளில் வருவதில்லை என அவரின் தொண்டர்கள் வியப்பதுண்டு.

கபீர்தாசர் சொன்னார் “இரவைக்கண்டு, இருளைக்கண்டு, பகையைக் கண்டு மனம் கலங்காதீர்கள். பொழுதுவிடியும். ஒளி பிறக்கும். அன்பு மலரும்” என்றார்.

கபீர்தாசர், ரவிதாசர், துளசிதாசர், பக்தமீரா, குருநானக், துக்காராம், ஏகநாதர் போன்ற அத்தனை மகான்களும் இருண்ட காலத்தில் தோன்றிய ஒளி விளக்குகள். எனவேதான் அவர்களை நாடி சமூகம் திரும்பியது, இருள் சூழ்ந்த வேளையில்தான் ஒளிவிளக்குகள் தேவை. உப்புக்கடலுக்கடியில்தான் பவளங்களும், வெண்முத்துகளும் பூக்கின்றன. கொடும் வெம்மைக்கிடையேதான் வைரங்கள் தோன்றுகின்றன. சாதிக் கொடுமைகளில் துயரங்களில் பொசுங்கிப் போகாது. அருந்ததியராகப் பிறந்த ரவிதாசர் பெரும் சமூக எழுச்சியை ஏற்படுத்தினார். இராமரின் ஆலயம் இடிக்கப்பட்ட பின்னர், இராமானந்தர் பெரும் இராமபக்தி வெள்ளம் கங்கைச் சமவெளி முழுதும் பாயச் செய்தார்.

கபீர்தாசரின், ரவிதாசரின், காந்தியடிகளின் காலங்கள் இந்திய வரலாற்றின் ஆன்மஒளி நிறைந்திட்டப் பொற்காலங்கள். அத்தகைய ஆன்மிக உணர்வின் உச்சத்தைப் பாரத தேசம் மீண்டும் மீண்டும் தொடும் காலங்கள் வரத்தான் போகின்றன.

செடிகளில் மலர்கள் பூக்கின்றன, நறுமணத்தை பரவச் செய்கின்றன. மகரந்தத் தூள்களைத் தருகின்றன. தேனைச்



சுரக்கின்றன. எவரையும் எதிர்பார்த்து மலர்கள் பூப்பதில்லை. கபீர்தாசரின் இதழ்கள் இறைவனைப் பாடிக்கொண்டே இருக்கும். இரவும் பகலும் இறைஉணர்வில் திளைப்பவர் கபீர். இரவு வேளைகளில் இனிய குரலில் கபீர்தாசர் பாடுவார். அற்புதமான கருத்துகள் பாடல்களின் வாயிலாகப் பயணிக்கும் அவரது பக்தர்கள் அப்பாடல்களை மனதில் பதிய வைத்துக்கொள்வார்கள். கபீர்தாசரின் கவிதைகள் எழுதப்படாது பரவியவை.

ஆயிரக்கணக்கான கபீர்தாசரின் பாடல்கள் வழக்கத்தில் உள்ளன. மிகச்சிலவே நூல் வடிவம் பெற்றுள்ளன. குருதேவர் இரவீந்திரநாத் தாகூர் ஆங்கிலத்தில் கபீர்தாசரின் நூறு பாடல்களை வெளியிட்டார். எளிய மக்கள் தினம் தினம் இன்றும் கபீர்தாசரின் பாடல்களைப் பாடி இறைஉணர்வைப் பெறுகின்றனர்.

“கபீர் என்னும் அடிமைகளால் எழுதுவதில்லை
கடவுளைக் கண்டு பிதற்றும் கபீர் கற்றவனல்ல
கண்ட இடமெல்லாம் கடவுளின் காட்சியே
கண்டதனால் கதறுகிறேன் காண வாருங்கள்
காகிதத்தில் புத்தகத்தில் கனத்த ஏடுகளில் கடவுளில்லை
வெட்டவெளியெல்லாம் கொட்டிக்கிடப்பவை
கண்டு மகிழாமல் காகிதத்தில் தேடாதீர்.

கபீர்தாசரின் கடவுள் தூரத்தில் தொலைவில் இல்லாது அவரைச் சுற்றிலும் இருப்பதாய் உணர்ந்தார். நெசவு நெய்வதை வேள்வியாகச் செய்தார். அவர் பிதற்றிய உணர்வுகள் கவிதைகளாக விழுந்தன. கபீர் தனிமனிதரல்ல. அவர் இயக்கமாக வாழ்ந்து பரவினார். அவரது கவிதைகள் அவருக்கு உரிமையானவை அல்ல. வடஇந்தியாவில் அவர் எளிய மக்களுக்குப் புதிய கவிதை இலக்கிய மரபினை உருவாக்கினார். கபீர்தாசரின் கவிதைகள் எளிய மக்களுக்கு மதங்களைத் தாண்டிய அற்புதமான ஒருமை என்னும் இறை உணர்வுக்குச் செல்லும் வழியினை வகுத்தது.

**நன்றி- சர்வோதயம் மலர்கிறது.**

**ஏப்ரல் 2024.**

## அரவிந்தர் சிந்தனைப் பொறிகள்



**உனக்கு ஞானம் கிடைக்கும் வரை, இறைவன் எந்நோக்கத்திற்கெனப் பகுத்தறிவை அளித்துள்ளானோ அதற்கெனப் பகுத்தறிவையும், இறைவன் எந்நோக்கத்திற்கென நம்பிக்கையும் உள்ளுணர்வையும் அளித்துள்ளானோ அதற்கென அவற்றையும் பயன்படுத்து. உன் உறுப்புகளை ஒன்றோடொன்று போரிடும்படி ஏன் நீ ஏவுகிறாய்.**

**அனுபவ மணித்திரள்கள்** – புதிய தொடர்

## உலகப் பழமொழிகள்

**அ**

அகம்பாவம் ஒரு பொல்லாத குதிரை அது தன் எஜமானனை ஒருமுறையாவது தள்ளாமல் விடாது. **- ஸ்காட்லாந்து.**

அச்சம்: புலியின் மேல் சவாரி செய்பவர் கீழே இறங்குவதற்கு அஞ்சுகிறார். **- இங்கிலாந்து**

அஞ்சினவனைப் பேய் அடிக்கும். **- தமிழ்**

அடுப்பின் எதிரிலேயே திறந்த வாயுடன் நிற்பதில் பயன் இல்லை. **- டென்மார்க்.**

அதிர்ஷ்டக்காரனை நைல் நதியில் தலைகீழாகத் தள்ளினாலும் அவனுடைய வாயில் ஒரு மீனோடு வெளிவருவான். **- அராபியா.**

உலகப் பழமொழிகள் | சு. லட்சுமி நாராயணன் | கங்கை புத்தக நிலையம், சென்னை.

# ஞானத்தமிழ்த் தேடல் – தொடர்- 2

23.03.2024 திருஅரசிலி (ஒழிந்தியாம்பட்டு).

திருஅரசிலி செல்லும்முன் ஆரோவில் யூனிட்டி அரங்கில் பேராசிரியர், மொழிபெயர்ப்பாளர், தமிழறிஞர் முனைவர் திரு. ப.மருதநாயகம் அவர்கள் தேவாரச்சிறப்பு மனிதநேயம் மக்கள் வாழ்க்கைமுறை பற்றி சிறப்பாக எடுத்துரைத்தார். சாகித்யஅகாதெமி விருதாளர் முனைவர் சொ. சேதுபதி, அனைவரையும் வரவேற்று சிறப்புரை நிகழ்த்தினார். கவிஞர் இரா.மீனாட்சி இந்நிகழ்ச்சியினை தொகுத்து வழங்கினார். தாகூர் கலைக்கல்லூரி தமிழ்த்துறைத் தலைவர் முனைவர் கோ. ரேவதி, இந்நிகழ்வில் பங்கேற்று சிறப்புச் சொற்பொழிவாற்றினார்கள். ஆரோவில் உதவிப்பள்ளித் தமிழாசிரியர் திரு. அருள்ஜோதி நன்றி கூறினார்.

புதுவை அருங்காட்சியகம் சார்பில் தேவாரம் தொடர்பான நூல்கள் காட்சிப்படுத்தப்பட்டன.. சிறு இடைவேளைக்குப்பின் திருவுலா தொடங்கியது. திருஅரசிலி சென்றடைந்ததும் கோவில் அர்ச்சகர் திரு. கணேஷ், கிராமப்பொதுமக்கள், மணியக்காரர் எங்களை வரவேற்றனர். நாதஸ்வர இசைநிகழ்ச்சியோடு திருக்கூட்டமாகக் கோவிலை வலம்வந்து ஒவ்வொரு சன்னதியிலும் பண்ணிசைத்து இறைச்சூழலை உருவாக்கினர் நம் மக்கள். பெரும்புலவர் வில்லியனூர் வேங்கடேசன் அய்யா அவர்கள் கற்றளிச் சுவர்களில் மிச்சம் மீதியிருந்த கல்வெட்டுகளை வாசித்துக் காட்டினார். இத்திருக்கோயிலின் வரலாற்றினை அறிந்துகொள்ள பேருதவியாக அமைந்தது. எப்படி கல்வெட்டு எழுத்துகள் உருவாகியுள்ளன என்பதைப் பயனாளிகள் கற்றுக்கொண்டனர்.





பொன்மாலை நேரத்தில் நால்வர் மண்டபத்தின் வெளிப்பிராகாரத்தில் கலைநிகழ்ச்சிகள் அர்ப்பணிக்கப்பட்டன. செல்வி.அ.தமிழ்த்தாமரை, நடராஜப்பெருமானின் ஆடலை நாட்டியமாக வழங்கினாள். அரவிந்தபுரம் ஆய்வாளர் கோபிநாதன் திருஅரசிலியின் வரலாற்றினை தமது சொந்தப் பாணியில் எடுத்துரைத்தார். பெரியநாயகி உடனுறை திருஅரசிலீஸ்வரரை தரிசனம் முடித்து, கோவிலுக்கு வந்துசெல்லும் மக்களுடன் இணைந்து பிரசாதம் பெற்றுக்கொண்டு அடுத்த ஆண்டு நடக்கவிருக்கும் கும்பாபிஷேக விழாவிற்காகப் பிரார்த்தனை செய்துகொண்டு வீடு திரும்பினோம்.

(தொடரும்) தமிழ்க்கூடல் குழுவினர்

## திருஅரசிலி - திருச்சிற்றம்பலம்

**பாடல் வண்டு அறை கொன்றை பால்மதி**
**பாய்புனல் கங்கை**
**கோடல் கூவிள மாலை மத்தமும்**
**செஞ்சடைக் குலாவி**
**வாடல் வெண்தலை மாலை மருவிட**
**வல்லியம் தோள்மேல்**
**ஆடல் மாசுணம் அசைத்த அடிகளுக்கு**
**இடம் அரசிலியே.**

– திருஞான சம்பந்தர்.

வாசகர் குரல்

அன்புள்ள ஆசிரியர் அவர்களுக்கு வணக்கம். ஆரோவில் செய்திமடல் ஓர் இலக்கியப் புதையலாய் வந்து சேர்ந்தது.

கொடிவிளக்கு- வெளிச்சத்தில் எத்தனை அற்புதங்கள்,பரவசங்கள். தங்களையே கொடிவிளக்காகக் கண்ட காட்டிய கட்டுரை மிகச்சிறப்பு.

சுவடி வந்த சுவடு - தமிழ்ப்புதையலை எடுத்துத் தந்த தமிழ்த்தாத்தாவின் தமிழ்த் தொண்டினை இன்றைய தலைமுறையினர்க்கு அடையாளப்படுத்துகிறது.

ஸ்ரீஅரவிந்தர் அன்னை சந்திப்பு மிகச்சுருக்கமாக முழுவரலாற்றையும் சொன்னதோடு இளைஞர் கல்விமையத்தையும் அடையாளம் காட்டுகிறது. கருமை என்பது இரவின் அழகு எனமுடியும். கவிதையும் மிக அழகுதான். என்னுடைய நூல்கள் பற்றியும் மிகவும் அழகாக அறிமுகம் செய்திருந்தீர்கள். மிக்க நன்றி.

**- வில்லியனூர் பழநி**

திருக்குறளில் தமிழ் இல்லை ஆனால் மொழி என்ற சொல் உள்ளது. மொழி வினைச்சொல் பேசு என்கிறது.இதுபோல Language என்றால் பேசு என இல்லை.தமிழில் மட்டும்தான் உள்ளது. ஏன்?பாஷா என்றால் மொழி. பேசு எனப் பொருள் இல்லை.

**- பெ.சிதம்பரநாதன், கோயமுத்தூர்**

வந்தது மார்ச்சின் நல்ஆரோவில் செய்திமடல்
தந்தது பற்பல தண்டமிழாய் - சிந்தைக்குச்
செய்தியெனப் போற்ற தமிழ்த்தாத்தா உ.வே.சா
செய்திப் படமும் சிறப்பு

அவர்பற்றிப் பாடிய பாரதிப் பாட்டும்
அவர்போலத் தந்த சுவடாம் - சுவடியும்
ஆன்ற அருணன் கைவண்ணம் என்றேநான்
ஊன்றிப் படித்தேன் உவந்து.

தீச்சொல்லும் சினமறியா செம்மை காத்தோன்.
திகழ்சாமி நாதனையன் சிறப்பை எல்லாம்
வாய்ச்சொல்லால் புகழ்ந்துவிடப் போகா துண்மை
மனமாரத் தமிழ்நாட்டோர் வணங்கத் தக்கோன்

என்று கி.வா.ஜ அவர்கள் உ.வே.சா அவர்களைப் புகழ்ந்தார்கள். அந்நினை வெல்லாம் கூட்டி அறியும் விதமாக உ.வே. சா. சிறப்பு மலராக இந்த 2024 மார்ச்சு மாத இதழ் இருந்தது. நன்றி.

**- தெ.முருகசாமி, புதுச்சேரி.**

(தமிழாகரர் தெ. முருகசமி ஐயா அண்மையில் குன்றக்குடி ஆதீனம் புகழ் வாழ்த்துப் பெற்றுள்ளார். நமது பாராட்டும் மகிழ்ச்சியும். - ஆர்)

## நன்றி மழையே

கடுமையான கோடை நாள் வெயிலின் உக்கிரத்தைத் தணித்திடும் வண்ணம் மே 15 வான்மழை பொழிந்தது. நமது மாலைவகுப்பு மாணவச் செல்வங்கள் மாமழை போற்றி எழுதிய சில நன்றிவரிகள்.

மழையே உமக்கு நன்றி
கவிதை மேகமாய் வந்து
சொல் மழையாய் வந்து
மண் வாசமாய் உணர்ந்து
மன வெப்பம் தணிந்து
மாறியது குளிர்ச்சியாய்
மழையே உமக்கு நன்றி - **யுவஸ்ரீ - வயது 17**

மழையே நீ குறையின்றி
பூமிக்கு வந்தாய்
உன்னை மகிழ்விக்க என்னிடம்
வார்த்தை ஒன்றே உள்ளது
நன்றி மழையே. **- சு. வினோதினி வயது - 30**

கதிரவனின் சூடு
கண்ணீராய் மழை
பசுமைத் தாய் சிரிக்க
பாலாய் வந்தது மழை.
**- எம். புவனேஸ்வரி - வயது -35**

மேகம் கருக்க
இடி மின்னல் அடிக்க
ஜோர் மழை. **- வி. தருண் - வயது - 17**

மழை என்பது கண்ணாடி போல
இரண்டும் விழுந்தால் சிதறிடும் இங்கே.

**- எஸ் தீபக் - வயது -17**

மழைநீர் வெள்ளம் ஓடியே
மண்ணில் வீழ்ந்து செல்லுதே
உழைப்பவன் வியர்வை போலவே - **வேதஸ்ரீ - 10**

மழைபொழியும்போது
குட்டை நீராய் நிரம்பியது
என் மனம். **- கே. சஞ்சய் - வயது - 13**

நம் வானத்தில் இருந்து விழும் நீர்த்துளிகள்
எம் கண்ணில் நிறையும் ஆனந்தத் துளிகள்.
**- சுவாதி - வயது - 12**

நீலக்கடலில் நீரை ஆவியாக முகந்து
சூலுற்ற மேகங்கள் தேடிச் சேர்த்து
சிலு சிலுவென்று காற்று வீசி
பலஉயிர் பிழைக்க பயிர்கள் செழிக்க
நல்மழை பெய்து சிரிக்கும் இயற்கை
வானில் இருந்து மழை பொழிகிறது
கானமயில் தோகை விரித்து ஆடுகிறது.
**- ரேவதி - வயது - 30**

**கொசுறு**

மழை வருது மழை வருது
நெல்லு குத்துங்கோ
முக்காப்படி அசிரி போட்டு
முறுக்கு சுத்துங்கோ
ஏரு உழும் மாமனுக்கு
எண்ணி வையுங்கோ
சும்மா இருக்கிற மாமனுக்கு
சூடு வையுங்கோ! **- (குழுப்பாடல்)**



## அறிவோம் நம் தமிழ் - XIX
## தமிழில் பழந்தமிழ்க் கலைச்சொற்கள்

**HOUSE -** **இல்லம் | இல் | மனை**
**வீடு | அகம்**
**குடியிருக்கும் இடம்**
**(குடியிருப்பு)**
**விடுதி | சத்திரம்**
**வணிக நிலையம் | நிறுவனம்**
**மாணவர் இல்லம் | சட்டசபை**
**கூடும் இடம் | திரையரங்கம்**
**நாடகக்கொட்டகை**
**முதியோர்/ஏதிலியர் இல்லம்**
**திணை | குடி**
**புக்கில் | மாடம்**
**வளிமறை | வளவு**
**பண்ணை | பாத்தில்**
**கொட்டகம் (சிறுவீடு)**
**புக்ககம் (புகுந்தவீடு)**
**பிறந்தகம் ( பிறந்தவீடு)**

**நன்றி: ஆங்கில - தமிழ் வகுப்பிற்குப் பயன்பட்ட அகராதி.**
International Advanced Deluxe Dictionary.


## தனிச்சுற்றுக்கு மட்டும்

வெளியீடு : ஆசிரியர் குழு
ஆரோவில் செய்திமடல்
இளைஞர்கள் கல்வி மையம்
ஆரோவில் - 605101
விழுப்புரம் மாவட்டம்
தமிழ்நாடு
மின்னஞ்சல் : tamil@auroville.org.in
தொலைபேசி : 0413-2623773
ஆசிரியர் : **இரா.மீனாட்சி**
வடிவமைப்பு : **சொ.அருணன்,** புதுவை.
அச்சு : **சூர்யா பிரிண்ட் சொலூசன்ஸ்,** சிவகாசி.